# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை

சாதாரண யுதவு பரிமள மதுகர வெகுவித ஆவணி

வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

உ
முருகா

## வள்ளிமலை சரவணப் பொய்கைத் திருப்பணி

### அரிய சந்தர்ப்பம்

வள்ளிமலை என்ற திருத்தலம், காட்பாடிக்கு 12 மைல் தூரம். முருகப் பெருமான் பலகாலும் திருவடி தோய வள்ளியம்மை பொருட்டு நடந்தருளிய அரிய பெரிய திருத்தலம். எம்பிராட்டி வள்ளியம்மை அவதரித்த மகாதேவி பீடம், இங்கு வந்து வழிபட்டோர் சகல வினைகளும் தீர்ந்து இகபர சௌபாக்கியங்களை எளிதில் பெறுவார்கள்.

இத்திருத்தலத்தில் சரவணப் பொய்கை பழுதுபட்டுளது. இதனைத் திருத்தி யமைப்பது இன்றி யமையாதது. திருப்பணி நடந்து வருகின்றது. எல்லோருக்கும் படியளக்கும் பெருமானுடைய திருக்குளத்துக்குப் படி போடுவது மிக மிக அவசியமாகும். எப்படி எப்படியோ பொருள் செலவழிகின்றது. அப்படியில் நம் பொருள் சேர்ந்தால் அப் படியுள்ள வரை நமக்கு கருணாகரனும் கந்தவேள் படியளப்பான்.

ஆசிரியர் கிருபானந்தவாரியாரிடமும் நேரில் செலுத்தலாம். ஒரு படிக்கு ரூபாய் 50. 5 படி, 10 படி யென்று பங்கு பெறலாம். மணியார்டர் மூலம் அனுப்புவதாயின் பின்வரும் முகவரிக்கு அனுப்பவும்.

திரு. A. S. அருணாசலம் பிள்ளை,
(பொருளாளர்)
A. S. A. பேக்கரி,
லாங்குபஜார், வேலூர் N. A.

வரப்பெற்றோம்

### திரு. வெள்ளியங்கிரி ஆண்டவர் பாமாலை

ஆக்கியோர், பாவலர் ஐ. கோ. இராமநாதன். வெளியிட்டோர், மறைமலை யடிகள் மன்றம்; புன்செய்ப் புளியப்பட்டி கோவை மாவட்டம். விலை 50 காசுகள். உயிரெழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களையும் முதலெழுத்தாகக் கொண்டு பாடிய 30 பாடல்களும் காப்பாக எட்டு பாடல்களும் உள்ளன. எளிய நடை பிற்சேர்க்கையாகக் குறிப்புரையும், திருவாசகத்திலுள்ள சிவபுராணமும், திருவெம்பாவையும் இணைக்கப்பட்டுள்ளன.

வேண்டுவோர், வெளியிட்டோருக்கு எழுதிப் பெறலாம்.

## 'அழகு வெள்ளம்'

(ஸௌந்தரிய லஹரீ)

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத ரவர்களால் இயற்றப் பெற்ற ஸௌந்தரிய லஹரி நூறு ஸ்லோகங்களையும் நூறு தமிழ்ச் செய்யுள்களாக அந்தந்த சுலோகங்களின் கருத்துக்களைப் பிரதிபலிக்குமாறு ஆக்கித் தந்துள்ளார் அன்பர் திரு. அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள். ஸம்ஸ்கிருதத்தில் மூலமும் சேர்ந்துள்ளது. காஞ்சி காமகோடிப் பெரியவர்களின் ஆக்ஞைப்படி 5-7-70ல் நடந்த திருவானைக்காக் கும்பாபிஷேகத்தின் சிறப்பு நினைவாக வெளியிடப்டுள்ளது.

வெளியிட்டோர் : புதுப்புனல் வெளியீடு திருச்சி-2.

உ

ஓம் குஹாய நம !



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"




| மலர் 35 | சாதாரணஹு—ஆவணி மீ<br>ஆகஸ்டு 1970 | இதழ் 5 |
|---|---|---|


## திருப்புகழ்

### திருவருணை

குரவநறு மளககுழல் கோதிக் காட்டியெ
குலவுமிரு கயல்கள்விழி மோதித் தாக்கியெ
குமுதமல ரொளிபவள வாயைக் காட்டியெ குழையாத
குணமுறுக இனிதுபயில் கூறிக் காட்டியெ
குலையஇரு கலைநெகிழ வீசிக் காட்டியெ
குடவியிடு மரிவையர்க ளாசைப் பாட்டிலெ
கொடியேன்யான்

பொருளிளமை கலைமனமு மேகப் போக்கிய
புலையனிவ னெனவுலக மேசப் போக்கென
பொறிவழியி லறிவழிய பூதச்சேட்டைகள் பெருகாதே
புதுமலர்கள் மருவுமிரு பாதத் தாற்றியெ
பொதுவகையி லருணைநிலை நீள்கர்த் தாத்தென
புகழடிமை தனையுனது பார்வைக் காத்திட
நினையாதோ

அரவமுட னறுகுமதி யார்மத் தாக்கமு
மணியுமொரு சடைமவுலி நாதர்க் கேற்கவெ
அறிவரிய வொருபொருளை போதத் தேற்றிய
அறிவோனே

அழகுசெறி குழலியர்கள் வானத் தாட்டியர்
தருமமுது சரவணையில் வாவித் தேக்கியெ
அறுசிறுவ ரொருவுடல மாகித் தோற்றிய
இளையோனே

சுரருலவ அசுரர்கள மாளத் தூட்பட
துயவுமுட லயிலைவிடு மாவுக் ராக்ரம
சுவறியெழு கடலுமுறை யாகக்கூப்பிட முனிவோனே

துடிமுழவு மறவரிட சேவற் காட்டினில்
துணைமலரி னணுகிதினை காவற் காத்தனை
கரியகுழல்குறமகளை வேளைக்காத்தணை
பெருமாளே.

## பதவுரை

அரவம் உடன்=பாம்பும், அறுகும்=அறுகம்புல்லும், மதி=சந்திரனும், ஆர்=ஆத்திமலரும், மத்தம்=ஊமத்தம்பூவும், அக்கமும்=உருத்திராட்சமாலையும், அணியும்=தரித்துள்ள, ஒரு மவுலி=ஒப்பற்ற சடை முடியுடைய, நாதர்க்கு ஏற்கவெ=சிவபெருமான் ஏற்றுக் கொள்ளும் வண்ணம், அறிவு அரிய ஒரு பொருளை=அறிவதற்கு அரிதான ஒப்பற்ற பிரணவப் பொருளை, போதத்து ஏற்றிய=உபதேசித்து அருளிய, அறிவோனே=அறிஞர் பெருமானே! அழகு செறி குழலியர்கள்=அழகு நிறைந்த கூந்தலை யுடையவர்களாய், வானத்து ஆட்டியர் தரும்=வானிட்த்தே வாழும் கார்த்திகை மாதர்கள் தந்த, அமுது=பாலமுதை, சரவணையில் வாவித் தேக்கியெ=சரவண மடுவில் நிரம்ப வுண்டு, அறுசிறுவர் ஒரு உடலம் ஆகித் தோற்றிய=ஆறு குழந்தைகளாயிருந்தவர்கள் ஒருடலாகி விளங்கித் தோன்றிய, இளையோனே=இளம் பூரணரே! சுரர் உலவ=தேவர்கள் மகிழ்ச்சியுற்று உலாவவும், அசுரர்கள் மாள தூள்பட=அசுரர்கள் மாண்டு பொடி படவும், துயவும்=அறிவு கலங்கும்படி, உடல்=கோபித்த, அயிலை விடும்=வேலாயுதத்தைச் செலுத்திய, மா உக்ரா=பெரிய உக்கிர மூர்த்தியே! க்ரம=நீதிமானே! எழு கடலும் சுவறி=ஏழு கடல்களும் வற்றிப் போய், முறை ஆககூப்பிட=முறையிட்டு ஒலி செய்ய, முனிவோனே=கோபித்தவரே! துடி முழவு=உடுக்கையையும் முரசையும் உடைய,

மறவர் இடம்=வேடர்களின், சேவல் காட்டினில்—காவல் பூண்ட கானகத்தில், துணை மலரின் அணுகி=இரு திருவடி மலர்களால் நடந்து சென்று, தினை காவல் காத்த அனை—தினைப்புனத்தைக் காவல் செய்த அன்னையும், கரிய குழல் குறமகளை=கரிய கூந்தலையுடைய குறவர் மகளுமாகிய வள்ளி பிராட்டியை, வேளை காத்து அணை=தக்க சமயம் பார்த்து அணைந்த, பெருமாளே=பெருமையில் சிறந்தவரே! குரவ நறு=குரா மலரின் நறுமணம் பொருந்திய, அளக குழல் கோதி காட்டியெ=அளகபாரமாகிய கூந்தலை கோதிக் காட்டியும், குலவும் இரு கயல்கள் விழி=விளங்குகின்ற இரு கயல் மீன்கள் போன்ற கண் களால், மோதி தாக்கியெ=ஆடவரது இதயத்தை மோதித் தாக்கி யும், குமுத மலர்=குமுத மலர் போன்றதும், ஒளி பவளம்=ஒளி பொருந்திய பவளம் போன்றதுமாகிய, வாயை காட்டியெ=வாயைக் காட்டியும், குழையாத குணம் முறுக=இளகாத காமக் குணம் முதிர்ச்சி யடையும்படி, இனிது பயில் கூறி காட்டியெ=இனிமையாக முன் பழகிய உறவைக் காட்டும் பேச்சுக்களைப் பேசிக் காட்டியும், இரு கலை குலைய நெகிழ—பெரிய புடவையும் அவிழ்ந்து போகுமாறு, வீசி காட்டியெ=முன் தானையை பக்கம் வீசிக் காட்டியும், குடவி இடும் அரிவையர்கள்=ஆடவர்களை வளைத்து இழுக்கும் பொது மாதர் களின், ஆசை பாட்டிலெ=காம லீலைகளிலே, கொடியேன் யான்= கொடியவனுகிய அடியேன், பொருள் இளமை கலை மனமும் ஏக போக்கிய=என்னுடைய பொருள் இளமை கல்வி மனம் ஆகிய இவை கள் யாவும் போகும்படி தொலைத்த, புலையன் இவன் என=கீழ்மகன் இவன் என்று, உலகம் ஏச=உலகத்தவர் இகழ்ந்துரைக்க, போக்கு என—போனதே போக்காக பொறி வழியில், அறிவு அழிய=சிறியே னுடைய அறிவு அழிய, பூத சேட்டைகள் பெருகாதே=ஐம்பூதங் களால் ஆய உடம்பின் குறும்புச் செயல்கள் என்னிடம் வளராத வாறு, புது மலர்கள் மருவும்=புதிய மலர்கள் பொருந்திபுள்ள, இருபாதத்து ஆற்றியெ=தேவரீருடைய இரு திருவடிகளால் சாந்தி பெற்று, பொது வகையில்=எல்லோர்க்கும் ஒப்ப முடிந்த வகையில், அருணையில் நீள்=திருவண்ணுமலையில் நிலைத்துள்ள, கர்த்த=தலை வரே! அத்த என=அப்பனே என்று கூறி, புகழ் அடிமைதனை=புகழ் கின்ற அடிமையாகிய என்னை, உனது பார்வை காத்திட நினையா தோ=உமது திருக்கண் பார்வை காத்தளிக்க நினைக்காதோ?

## பொழிப்புரை

பாம்பும், அறுகும், சந்திரனும், ஆத்தி மலரும், ஊமத்தம் பூவும், உருத்திராட்சமாலையும் தரித்துள்ள ஒப்பற்ற சடை முடியுடைய சிவபெருமான் திருவுள்ளம் உவந்து ஏற்குமாறு, அறிதற்கரிதாய ஒப்பற்ற பிரணவப் பொருளை அவருக்கு உப தேசித்தருளிய அறிஞரே! அழகு நிறைந்த கூந்தலை யுடையவா

களாய் வானில் உறையும் கார்த்திகை மாதர்கள் தந்த பால முதை, சரவணப் பொய்கையில் நிரம்பவுண்டு, ஆறு சிறுவர் களாய் இருந்து பின்னர் ஒன்று சேர்ந்து ஒருடலாய்த் தோன் றிய இளம் பூரணரே! தேவர்கள் மகிழ்ந்து உலாவவும், அசு ரர்கள் அழிந்து பொடியாகவும், அறிவு கலங்குமாறு கோபித்த வேலாயுதத்தைச் செலுத்திய, மகாவுக்கிர மூர்த்தியே! நீதி மானே! ஏழு கடல்களும் வற்றி ஓ என்று ஒலிக்கச் சீறியவரே! உடுக்கை, முரசு என்ற வாத்தியங்களையுடைய வேடர்களின் காவல்கொண்ட கானகத்தில் இரு திருவடிகளால் நடந்து சென்று, தினைப்புனங் காவல் புரிந்ததாயும், சுருண்ட கூந்தலை யுடைய குறமகளும் ஆகிய வள்ளிநாயகியைச் சமயம் பார்த் துத் தழுவிய பெருமிதம் உடையவரே! குரா மலரின் நறுமணம் பொருந்திய அளகபாரக் கூந்தலைக் கோதிக்காட்டியும், விளங்கு கின்ற இரண்டு கயல்மீன்கள் போன்ற கண்கள் கொண்டு உள்ளத்தை மோதித் தாக்கியும், குமுதமலர் போன்றதும் ஒளி பொருந்திய பவளம் போன்றதுமாகிய வாயைக் காட்டியும், இளகாத காம குணம் முதிர்ச்சியடையுமாறு இனிமையாக, முன் பழகிய உறவுமுறையைப் பேசிக் காட்டியும், பெரிய புடவை அவிழ்ந்து நெகிழுமாறு, முன்தானையை வீசிக்காட்டி யும், ஆடவர்களை வளைந்திழுக்கும் பொதுமாதர்களுடைய காம லீலைகளிலே கொடியவனுகிய அடியேன், என்னுடைய பொருள், இளமை, கல்வி, மனம் ஆகிய இவைகள் யாவும் அழியுமாறு தொலைத்த கீழ்மகன் இவன் என்று உலகத்தவர் இகழ்ந்து பேச, போனதே போக்காக, ஐம்பொறிகளின் வழியிலே சென்று, என் அறிவு அழிய, ஐம்பூதங்களால் ஆய உடம்பின் குறும்புச் செயல்கள் என்னிடம் வளராதவாறு, புதிய மலர்கள் பொருந்தி யுள்ள உமது திருவடிகளால் சாந்தி பெற்று, எல்லோர்க்கும் ஒப்பமுடிந்த திருவண்ணாமலையில் நிலைத்துள்ள பெரிய தலை வரே! அப்பனே! என்று உம்மைப் புகழ்கின்ற இந்த அடிமை யாகிய என்னை, உமது திருக்கண் பார்வை காத்தளிக்க நினைக் காதோ ?

## விரிவுரை

**குரவநறு மளககுழல் கோதிக் காட்டியெ:—**

குராமலரினால் மணம் வீசும் கூந்தலை நடுவீதியில் நின்று சிக்கெடுப்பார் போல் பாவனை புரிந்து, வீதிவழியே செல்லும் ஆடவர்களைத் தம் மையல் வலையில் சிக்கவைப்பார்கள் விலை மகளிர்.

> "அங்கை மென்குழ லாய்வார் போலே
> சந்தி நின்றய லோடே போவார்
> அன்பு கொண்டிட நீரோ போறீர் அறியீரோ"
>
> —(அங்கை) திருப்புகழ்.

**குலவு மிரு கயல் விழிகள் மோதித் தாக்கியெ:—**

அப் பொது மகளிர் தமது கயல்மீன் போன்ற கடைக்கண் பார்வையால் ஆடவர் மனதைத் தாக்கி அல்லற்படுத்துவர்.

**"படையெம படையென**
**அந்திக் குங்கட் கடையாலே" —(பரிமள) திருப்புகழ்.**

**குமுத மல ரொளிபவள வாயைக்காட்டியெ.—**

குமுத மலர் போலவும், பவளம் போலவும் விளங்குகின்ற தங்கள் வாயைப் புன்சிரிப்புடன் காட்டி மயக்குவர்.

**குழையாத குணமுறுக இனிதுபயில் கூறிக்காட்டியெ:—**

ஆடவருடைய பரிதாபமான நிலைமையைக் கண்டு இளகாத குணத்தை யுடையவர்கள். இத்தகு காம குணம் மிகுதியடையும்படி முன்னே பழகிய உறவைச் சுட்டிக்காட்டி இனிமை யாகக் கனியமுதம்போல் பேசுவர்.

**"அன்று வந்தொரு நாள் நீர் போனீர்**
**பின்பு கண்டறியோம் நாமீதே**
**அன்று மின்றுமோர் போதோ போகா துயில்வாரா"**
**—(அங்கை) திருப்புகழ்.**

அம்மாதர்கள் கூறும் இன்னுரையால் ஆடவர் மதிமயங்கி கள்ளுண்ட வண்டுபோல் சொக்கித்திரிவர்.

**குடவியிடு மரிவையர்கள்:—**

குடவியிடும்—ஆண்களைக் குடைந்து வளைத்துப்பிடித்து இளைக்க வைப்பார்கள்.

**பொரு ளிளமை கலைமனமு மேகப் போக்கியெ:—**

விலைமகளிரின் வசமான ஆடவர்கள் செல்வம், இளமை, கல்வி, மனம் என்ற நான்கையும் ஒருங்கே தொலைத்து விடு வார்கள்.

**போக்கென பொறிவழியி லறிவழிய:—**

மனம்போன போக்கே போய், மெய், வாய், கண், நாசி, செவி என்ற ஐம்பொறிகளின் வழியே சென்று அறிவழிவர்.

இந்த ஐம்பொறிகளின் வழியே செல்லும் தீ நெறியை மாற்றி நல்வழி செல்வதே அறிவின் பயன்.

**உரனென்னுந் தோட்டியான், ஓரைந்துங் காப்பான்**
**வரனென்னும் வைப்புக்கோர் வித்து.**
**சென்ற விடத்தால் செலவிடா தீதொரீஇ**
**நன்றின்பா லுய்ப்ப தறிவு. —திருக்குறள்.**

**பூதச் சேட்டைகள் பெருகாதே:—**

மண், நீர் அனல் காற்று வெளி என்ற ஐம்பூதங்களால் ஆய உடம்பின் குறும்புச் செயல்கள் வளராதவாறு அடக்கியாளுதல் வேண்டும்.

இதற்கு வழி இறைவனுடைய திருவடித் தியானமேயாகும்.

**புதுமலர்கள் மருவுமிரு பாதத் தாற்றியெ:—**

அடியவர்கள் அருச்சிக்கும் புதிய மலர்கள் பொருந்திய இறைவனுடைய திருவடியில் சாந்தி பெறுதல் வேண்டும்.

**பொதுவகையி லருணை நிலை நீள் கர்த்தாத்தென:—**

எல்லோர்க்கும் ஒப்பமுடிந்த பொது நிலையில் முருகன் திருவருணையில் எழுந்தருளி விளங்குகின்றான். அப்பரம பதியை, "தலைவனே! முதல்வனே" என்று துதி செய்ய வேண்டும்.

கர்த்தாத்தென—கர்த்த அத்த என பதப்பிரிவு செய்க.

**புகழடிமை தனையுனது பார்வைக் காத்திட நினையாதோ:—**

"முருகா! உன்னையே புகழ்கின்ற அடியேனை உனது திருக்கண் பார்வை காத்தளிக்க நினையாதோ?" என்று அடிகளார் உளம் உருகி வேண்டுகின்றார்.

முருகனுடைய அருட்பார்வை ஆணவ பலத்தைக் கெடுத்து, சிவஞானத்தைக் கொடுத்துக் காக்குந் திறனுடையது.

**"ஆணவ அழுக்கடையு மாவியை விளக்கியநு**
**பூதியடைவித்ததொரு பார்வைக்காரனும்"**

**—வேளைக்காரன் வகுப்பு.**

**அரவமுட னறுகுமதி யார்மத்தாக்கமு மணியும்:—**

சிவபெருமான் தமது சடைமுடியில் பாம்பு, பிறைமதி, ஆத்திமலர், ஊமத்தம்பூ, உருத்திராக்கமாலை என்ற இவைகளை யணிந்து அருள்புரிகின்றார்.

மத்தாக்கமும்—மத்த ஆக்கமும்.

ஆக்கம்—உருத்திராக்கம்.

**அறிவரிய வொருபொருளை போதத்தேற்றிய அறிவோனே:—**

அறிதற்கரிதான பிரணவப் பொருளைச் சிவபெருமான் ஏற்குமாறு முருகவேள் உபதேசித்தார். அதனால் "அறிவோனே" என்கின்றார்.

தந்தைக்கு உபதேசித்த தனயன். தம்மினும் தம் மக்கள் அறிவுடையவரா யிருப்பது பெருமைக்குரியது.

தம்மிற் றம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது. —திருக்குறள்.

**அழகு செறி குழலியர்கள் வானத் தாட்டியர் தருமமுது சரவணையில் வாவித் தேக்கியெ அறு சிறுவ ரொருவுடல மாகித் தோற்றிய இளையோனே:—**

மாலயனுதி வானவர்களின் குறைமுடிப்பான் மறைமுடிப் பொருளாகிய சிவபெருமான் தமது நெற்றிக் கண்களில் ஆறு அருட்பெருஞ் சுடர்களை யளித்தருளினர்.

அந்த ஆறு அருட்சுடர்களையும் வாயு தேவனும் அக்கினி தேவனும் கொண்டுபோய் கங்கையில் விடுப்ப, கங்கையில் தவழ்ந்து சரவணப் பொய்கையில் சேர்ந்து, அழகிய சிறந்த தாமரை மலரில் ஆறு திருமுகங்களும், பதினெட்டுத் திருக் கண்களும், பன்னிரு புயங்களும் கொண்டு திருமுருகன் தோன்றியருளினர்.

அப்பெருமானுக்குப் பால் கொடுக்க ஆறு கார்த்திகைப் பெண்கள் அங்கு வந்தார்கள்.

வேண்டுவார் வேண்டுவதை உடனே வழங்கும் வள்ள லாகிய திருமுருகன் ஆறு மாதர்களும் அந்த ஒரு முருகனை எடுக்க, ஆறு குழந்தைகளாகப் பிரிந்து அறுவர் கரமலரிலும் காட்சி தந்து மாட்சி யளித்தார்.

''உவகையொடு கிர்த்திகையர்
அறுவரு மெடுக்க அவர்
ஒருவ ரொருவர்க் கவணெ ரோர்புத்ர னைவனும்''
—வேடிச்சிகாவலன் வகுப்பு.

மறுவறு மாரலாகு மாதர்மூ விருவர்தாமும்
நிறைதரு சரவணத்தின் நிமலனை அடைந்துபோற்ற
உறுநர்கள் தமக்கு வேண்டிற் றுதவுவோ னதலாலே
அறுமுக வொருவன் வேறய் அறுசிறுர் உருவங்கொண்டான்.
—கந்தபுராணம்.

இவ்வாறு ஒருவனே அறுவராய் நின்று கார்த்திகைப் பெண்களின் திருமுலைப்பாலுண்டு விளையாடினர்.

சிவபெருமானுடன் அங்கு உமாதேவியார் எழுந்தருளி, அந்த ஆறு குழந்தைகளையும் ஒருங்கே யெடுத்து அணைக்க, முருகன் பண்டுபோல ஒரு வடிவத்துடன் காட்சியளித்தான்.

..................':எடுத்தனள் புல்லித்
திருமுகங்களோ ராறுபன் னிருபுயஞ் சேர்ந்த
உருவம் ஒன்றெனச் செய்தனள் உலக மீன் றுடையாள்''
—கந்தபுராணம்.

''அன்னவள்கண் டவ்வுருவம் ஆறினையுந்—தன்னிரண்டு
கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறும் ஒன்ருக மேவுவித்து'' —கந்தர் கலிவெண்பா.

**சேவற் காட்டினில்:—**

சேவல்—காவல்.
காவலுடைய கானகம்.

''இறடியஞ் சேவற்கு எறிகவண் கூட்டியும்'' —கல்லாடம்: 85-9.

''உயிர் சேவலுக்கே'' —கந்தரந்தாதி 15.

**காத்தனை:—**

காத்த அனை; தினைக் காவல் புரிந்த அன்னை.

**வேளைக் காத்தணை:—**

சமயம் பார்த்து வள்ளியை மருவியருளினன்; ஆன்மாக்களின் இருவினையொப்பு மலபரிபாகம், சத்தினிபாதம் என்ற பக்குவத்தைக் கண்டு இறைவன் திருவருள்புரிவான் என்பது குறிப்பு.

''விறன்மறவர் சிறுமிதிரு வேளைக்காரப் பெருமாளே''
—(ஒருபொழுது) திருப்புகழ்.

## கருத்துரை

அருணை யண்ணலே! உனது அடிமையைக் கடைக்கண் பார்வை செய்து காத்தருள்.

## திருப்புகழ்

குழவியு மாய்மோக மோகித குமரனு மாய்வீடு காதலி
குலவனு மாய்நாடு காடொடு தடுமாறிக்
குனிகொடு கூனீடு மாகிடு கிழவனு மாயாவி போய்விட
விறகுட னேதூளி யாவது மறியாதாய்ப்
பழயச டாதார மேனிகழ் கழியுடல் காணு நிராதர
பரிவிலி வானூலை நாடொறு மடைமாறிப்
பலபல வாம்யோக சாதக வுடல்கொடு மாயாத போதக
பதியழி யாவீடு போயினி யடைவேனோ

எழுகடல் தீமூள மேருவு மிடிபட வேதாவும் வேதமு
மிரவியும் வாய்பாறி யோடிட முதுசேடன்
இருளறு பாதாள லோகமு மிமையமு நீறுக வாள்கிரி
யிருபிள வாய்வீழ மாதிர மலைசாய

அழகிய மாபாக சாதன னமரரு மூர்பூத மாறுசெய்
அவுணர்த மாசேனை தூளெழ விளையாடி
அமரினை மேவாத சூரரை அமர்செயும் வேலாயு தாவுயர்
அருணையில் வாழ்வாக மேவிய பெருமாளே.

### பதவுரை

எழு கடல் தீமூள=ஏழு கடலும் தீ மூண்டு எரியவும், மேருவும் இடிபட=மேருமலையும் பொடிபடவும், வேதாவும்=பிரமனும், வேதமும்=வேதங்களும், இரவியும்=சூரியனும், வாய் பாறி ஓடிட=இடம் விட்டுப் பெயர்ந்து ஓடவும், முது சேடன்=பழமையான ஆதிசேடன் வாழும், இருள் அறு பாதாள லோகமும்=இருள் இல்லாத பாதாள லோகமும், இமயமும் நீறுக=இமயமலையும் பொடியாகவும், வாள்கிரி இரு பிளவாய் வீழ=சக்கரவாளகிரி இரண்டு பிளவுபட்டு வீழவும், மாதிர மலை சாய=திசைகளில் உள்ள எட்டு மலைகளும் சாய்ந்து விழவும், அழகிய மா பாக சாதனன்=அழகுள்ள சிறந்த இந்திரனும், அமரரும்=தேவர்களும், ஊர் பூத=தங்கள் நகரில் குடி புகவும், மாறு செய்=நீதிநெறிக்கு மாறானதையே செய்கின்ற, அவுணர்தம் மாசேனை தூள் எழ=அசுரர்களுடைய பெரிய சேனை தூள்படவும், விளையாடி=திருவிளையாடல் புரிந்து, அமரினை மேவாத சூரரை=அமைதியைப் பொருந்தாத சூரர்களுடன், அமர் செயும்=போர் புரிந்த, வேலாயுதா=வேலாயுதக் கடவுளே! உயர் அருணையில் வாழ்வு ஆக மேவிய=உயர்ந்த திருவண்ணாமலையில் வாழ்வாக வீற்றிருக்கும், பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! குழவியும் ஆய்=குழந்தையாய் இருந்து, மோக மோகித குமரனும் ஆய்=மோகத்தையே விரும்பும் குமரப் பருவத்தனாய், வீடு காதலி குலவனும் ஆய்=வீடு மனைவி இவைகளுடன் கூடிக் குலவுபவனாய், நாடு காடு ஒடு தடுமாறி=நாட்டிலும் காட்டிலும் உழன்று தடுமாறுபவனாய், குனி கொடு கூன் நீடும் ஆகிடு கிழவனுமாய்=உடல் வளைந்து கூன் பெரிதாய கிழவனுமாய், ஆவி போய் விட=உடலை விட்டு உயிர் நீங்க, விறகு உடனே தூளி ஆவதும்=உடல் விறகுடனே சாம்பற் பொடியாவதையும், அறியாதாய்=அறிந்து தாவி, பழைய சட் ஆதாரம் மேல் நிகழ்=பழமையான ஆறு ஆதாரங்களின் மேல் காணக்கூடிய, கழி உடல் காணா=உடம்பு நீங்கிய நிலையை யடைந்து, நிராதர=சார்பு வேண்டாததும், பரிவு இலி=துன்பம் இல்லாததுமான, வான்=வான வெளியில்

**நின்று, நாள் தொறும்=தினந்தோறும், நாலே மடை மாறி=வீணே கழியும் நாலங்குலப் பிராண வாயுவைக் கழியாது திருப்பி, பல பல ஆம் யோக சாதக=பலப் பல விதமான யோகப் பயிற்சிகள் செய்து, உடல் கொடு=அழியாத உடலைப் பெற்று, மாயாத போதக=அழியாத அறிவு மயமான, பதி அழியா வீடு போய்=இறைவனுடைய அழிவற்ற முத்தி வீட்டைச் சென்று, இனி அடைவேனே=இனியேனும் அடியேன் சேருவேனே?**

## பொழிப்புரை

ஏழு சமுத்திரங்களும் தீ மூண்டு எரியவும், மேருமலையும் பொடிபடவும், பிரமதேவனும் வேதங்களும் சூரியனும் இடம் விட்டுப் பெயர்ந்து ஓடவும், பழமையான ஆதிசேடன் வாழுகின்ற இருள் இல்லாத பாதாள லோகமும் இமயமலையும் பொடியாகவும், சக்கரவாளகிரி இரண்டாகப் பிளந்து வீழவும், திசைகளில் எண்கிரிகளும் சாய்ந்து வீழவும், அழகும் சிறப்புமுடைய இந்திரனும் தேவர்களும் அவர்களுடைய பொன்னுலகில் குடியேறவும், பகைமை யுடைய அசுரர்களின் பெரிய சேனை தூள் படவும் விளையாடி, அமைதியைப் பொருந்தாத சூரர்களுடன் போர்புரிந்த வேலாயுதக் கடவுளே! சிறப்பு வாய்ந்த திருவண்ணுமலையில் வாழ்வாக எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! குழந்தையாய் இருந்து, பின்பு மோகத்தை விரும்பும் குமாரப் பருவத்தை யுடையவனாய், வீடு மனைவியுடன் கூடிக் குலாவுபவனாய், நாட்டிலும் காட்டிலும் உழன்று தடுமாறுபவனாய், பின்னர் உடல் வளைந்து கூன் பெரிதான கிழவனாய், உடலைவிட்டு உயிர் பிரிய, உடம்பை விறகில் சாம்பராவதையும் அறிந்து, இந்த அவலநெறியை யகற்றி, பழமையாயுள்ள ஆறு ஆதாரங்களின் மேல் நிலையில் காணக்கூடிய, உடலின் நினைவு அற்றும், சார்பு வேண்டாததும், துன்பமில்லாததுமான ஞானவெளியில் நின்று, வீணே கழியும் நாலங்குலப் பிராண வாயுவைக் கழியவிடாமல் திருப்பி, பலப்பலவிதமான யோக சாதனங்கள் செய்து உடலை வளர்த்து, அழிவில்லாததும், அறிவு மயமானதுமான இறைவனுடைய அழியாத முத்தி வீட்டை நாடிச்சென்று இனியேனும் சேருவேனோ ?

## விரிவுரை

**குழவியுமாய்:—**

உடம்பு பரிணமம் அடைகின்ற இயல்புடையது.

**குலவனும்:—**

குலவன்—மனைவி மக்களுடன் குலாவுபவன்.

அல்லது நல்ல குலத்தினன் என்றும் பொருள் கொள்ளலாம்.

"பனிக்கதிர் குலவன்" —கல்லாடம் 10

"குலமிலா தானைக் குலவனே யென்று" —சுந்தரர்.

**விறகுடனே தூளியாவதும் அறியா:—**

பாலுந் தேனும் பழமும் உண்டு வளர்த்த இவ்வுடம்பு முடிவில் விறகில் வெந்து சாம்பராகுந் தன்மையுடையது.

எத்துணைப் பெரிய உடம்பாயினும், முடிசார்ந்த மன்னவனுடம்பாயினும் முடிவில் பிடி சாம்பல்தான் ஆகும்.

"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரு முடிவிலொரு
பிடிசாம்பராய் வெந்து மண்ணாவதும்" —பட்டினத்தார்.

"ஒருபிடி சாம்பருங் காணாது மாயவுடம்பிதுவே" —கந்தரலங்காரம்.

இந்த நிலையாமையை யறிவ்து அறிவுடைமையாகும்.

**தாய்:—**

தாவி என்ற சொல் தாய் என வந்தது. இந்த பொய்மையிலிருந்து தாவி அப்பாற் போகவேண்டும்.

**பழய சடாதார மேனிகழ்:—**

மூலாதாரம், மணிபூரகம், சுவாதிஷ்டானம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்கள் பழமையானவை. இவைகளை யோக நெறியால் கடந்து, பிரமரந்திரம் தாண்டி மேலைப் பெருவெளியில் சென்று நிற்றல் வேண்டும்.

"நீடார் சடாதரத்தின் மீதே பராபரத்தை
நீகாணென அனைச்சொல் அருள்வாயே"

—(நாவேறு) திருப்புகழ்.

**கழியுடல் காண:—**

உடம்புடன் நின்றே உடம்பை மறந்த நிலை.

"உடம்பொடு செத்திட்டிருப்பர் சிவயோகி யார்களே."

—திருமந்திரம் 121.

"நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லாம் ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு
என்னை மறந்திருந்தேன் இறந்தே விட்டது இவ்வுடம்பே"

—கந்தரலங்காரம் 19.

**நிராதார பரிவிலி வான்:**

பற்றுக்கோடு இல்லாததும் துன்பமில்லாததுமான ஞான வெளி. பரிவு—துன்பம்.

# கற்பு

---

## ஜெயசேனு

ஜெயசேனுவும் அவள் கணவனும் சீசனுக்குத் திருக்குற்ருலம் போய் 15நாட்கள் தங்கிவிட்டுச்சென்னைக்குத்திரும்பி திருவனந்தபுரம் மெயிலில் பிரயாணம் செய்துகொண்டிருந்தார்கள். மூன்றடுக்குப் பெட்டியில் இருவரும் அமர்ந்து தங்கள் குடும்ப விஷயமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பேச்சில் எத்தனை எத்தனையோ விஷயங்கள் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. வானொலி விஷய மாகவும், தாங்கள் பார்த்த சினிமாவைப் பற்றியும், குற்ருலத்தில் கூடும் மக்களைப் பற்றியும், அரசியலைப் பற்றியும் உரையாடினுர்கள்.

புகைவண்டி விருதுநகரில் நின்றது. சிவசங்கரன் வண்டியை விட்டிறங்கி அவசரமாக, நெய் வடையும் காப்பியும் வாங்கி வந்து

---

**நாலை மடைமாறி:—**

உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதது பிராணவாயு. இது வெளியே போவது 12 அங்குலம்; உள்ளே மீள்வது 8 அங் குலம். 4 அங்குலம் வீணுகி விரயமாகின்றது.

இங்ஙனம் 4 அங்குல வாயு வீணுகாமல் உள்ளே செலுத் தும் யோகிகள் கற்பகாலம் நிலைத்து இருப்பர்.

**பலபலவாம் யோக சாதக உடல்கொடு மாயாத போதகம்:—**

ஆலம்ப யோகம், நிராலம்ப யோகம்; குண்டலி யோகம் சிவராஜ யோகம், என்பனவாதி. யோகங்களில் பலவகை யுண்டு.

யோகத்தால் நித்திய தேகம் பெற்று யோகிகள் சித்திர தீபம்போல் அசைவற்று இருப்பார்கள்.

**அழியா வீடு போயினி யடைவேனே:—**

என்றும் அழியாத முத்தி வீட்டைப் பெறவேண்டும் என்று அடிகளார் முருகனிடம் வேண்டுகின்ருர்.

**எழுகடல் தீமுள.........விளையாடி:—**

முருகப் பெருமான் திருவிளையாடலின் பெருமையை இத் திருப்புகழின் 5, 6, 7 என்ற அடிகள் விதந்து விளம்புகின்றன.

### கருத்துரை

அருணைமேவும் அண்ணலே! அழியாத முத்தி வீட்டினை அடியேனுக்கு அருள் செய்.

தன் அருமை மனைவி ஜெயசேனவிடம் தந்தான். வண்டி புறப்படும் சமயம், பிளாட்பாரத்தில் இப்படியும் அப்படியுமாக உலாவிக் கொண்டிருந்த ஒரு பெரியவர் இவர்கள் ஏறியுள்ள பெட்டியில் ஏறினர். ஜெயசேன அமர்ந்துள்ள பகுதிக்கு எதிர்ப் பகுதியில் அமர்ந்தார்.

சிவசங்கரன் அவர் தென்காசியில் முதல் வகுப்பில் அமர்ந்திருந்ததைப் பார்த்தான். இப்போது அவர் மூன்றும் வகுப்பில் ஏறியதைக் கண்டு காரணம் தெரியாமல் திகைத்தான்.

ஏறிய பெரியவர் உயர்ந்த சட்டையும், தங்கச் சங்கிலியுடன் கூடிய உயர்ந்த பாக்கிட்டு கெடியாரமும், தளர்ந்த உடம்பும் முகத்தில் சுருக்கமும், சிறிது வழுக்கைத் தலையும், முகத்தில் கெம்பீரமான பொலிவும், ஆழ்ந்த அறிவும் படைத்தவராய் விளங்கினர்.

அந்தக் கிழவர் ஜெயசேனவை இமை கொட்டாது பார்த்தார். சிவசங்கரத்தையும் மாறி மாறிப் பார்த்தார். கிழவர் குறிப்பாகத் தன் மனைவியை உற்றுப் பார்ப்பதைக் கண்ட சிவசங்கரத்துக்கு ஆத்திரம் பொங்கியது. ஒரு அறை தரவேணும் போல் சீற்றம் எழுந்தது. ஆனல் தன் அறிவின் திறத்தால் சினத்தை அடக்கிக் கொண்டான்.

பெரியவர் ஓடுகின்ற வண்டியில் ஜெயசேனவையே பார்த்துக் கொண்டிருந்தார். சிவசங்கரம் தனக்குள் "இந்தக் கிழவனுக்கு வயது முதிர்ந்தும் பெண்ணசை விட்டபாடில்லையே. சீ, சீ! இது ஒரு பிறப்பா? பல கிழவர்கள் இப்படித்தான் சீரழிகின்றார்கள். நாயினும் கேடுகெட்ட நர ஜென்மங்கள். இந்தக் கிழவன் காமப் பித்துக் கொண்டவன் போலும்' இந்த வயதில் இப்படி யிருந்தால் காளைப் பருவத்தில் எப்படி யிருந்திருப்பான்?

"பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனென்றோ? ஆன்ற வொழுக்கு,"

என்ற திருக்குறளை இந்த பாவிக் கிழவன் படித்திருக்கமாட்டான? பார்வை பாவத்தைத் தேடி நரகப் பாதையில் போகின்றான்" என்றெல்லாம் எண்ணினன்.

பெரியவர், "தம்பீ! நீங்கள் எங்கு போகின்றீர்கள்?" என்று கேட்டார்.

கோபக் கனலால் கொதித்துக் கொண்டிருந்த சிவசங்கரம், "சென்னைக்கு" என்று இரத்தினச் சுருக்கமாகச் சொன்னன். அவன் குரலில் கோபத்தீ கொழுந்து விட்டெரிந்தது.

"நமது மனைவியைக் கண்டு களிப்பதற்காகவே இந்தக் கிழவன் முதல் வகுப்பில் பிரயாணம் செய்வதையும் விடுத்து நம் வண்டியில்

ஏறி, காமப்பித்து தலைக்கு ஏறி மாறி மாறி நம் அரும் பெருந்தன மாகிய ஜெயாவைப் பார்க்கின்றான்'' என்று எண்ணினான்.

''தம்பீ! தங்கள் பேர்?''

''என் பேர் சிவசங்கரம்.''

''இந்த செல்வியின் பேர்?''

''ஜெயசேனா.''

''குற்றாலம் போய் வருகின்றீர்களா?''

''ஆமாம்.''

''தங்களுக்கு சென்னையில் என்ன வேலை?''

''இப்போது வேலையில்லை; சும்மாதான் இருக்கின்றேன்.''

''தம்பீ! நீ பரம பாக்கியசாலி. இந்த உத்தமியை மனைவியாகப் படைத்த உன் அதிர்ஷ்டத்துக்கு அளவு உண்டா? இந்த சௌபாக்கிய வதிக்கு நிகர் இந்த மண்ணுலகில் வேறு யாரும் இல்லை. ஏதோ முன் பிறப்பில் நீ செய்த புண்ணியப் பயனால் இவள் உனக்கு வாழ்க்கைத் துணைவியாக வந்திருக்கின்றாள். அடக்கம், அன்பு, பண்பு, அழகு, அறிவு, தோற்றம், ஏற்றம் எல்லாம் ஒருங்கே யடைந்த இவள் சாக்ஷாத் திருமகளேதான். சமானமில்லாத தனித்த—இனித்த முக முடைய இவள் உன் அகமுடையாள் என்றால் இந்த வாய்ப்பு யார்க் குக் கிடைக்கும்'' என்று அடுக்கிக் கொண்டே போனார். இந்த வார்த் தைகள் சிவசங்கரத்தின்கோபத்தீயில் நெய் விடுவதுபோல் இருந்தது. வண்டி மதுரைக்கு வந்து நின்றது.

கிழவர் அங்கு விற்றுக்கொண்டிருந்த சாத்துக்குடி, கருப்பு திராட்சை இவைகளை ஒரு கூடை நிரம்ப வாங்கி ''சாப்பிடுங்கள். இது உங்களுக்குத்தான்'' என்றார். சிவசங்கரத்துக்கு மேலும் சினம் மீதூர்ந்தது.

''ஐயா! வேண்டாம். தாங்கள் உங்கள் வண்டிக்குப் போங் களேன்'' என்றான்.

''தம்பீ! அங்கே நான் ஒருவன்தான், மொட்டு மொட்டு என்று தனியாகப் பிரயாணம் செய்வதை நான் விரும்பவில்லை. உங்களுடன் சேர்ந்து பிரயாணம் புரிவது எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது'' என்று கூறிவிட்டு, உயர்ந்த காப்பியைத் தருவித்து இருவரையும் வற் புறுத்திச் சாப்பிடச் சொன்னார்.

ஜெயசேனாவுக்கும் கிழவருடைய போக்குப் பிடிக்கவில்லை. இந்தக் கிழவருக்கு நான் மகள் போன்றவள். ஏன் இந்தக் கிழம் நம்மையே பார்க்கின்றது? என்று உள்ளத்துக்குள் சலித்துக் கொண்டாள்.

வேண்டா வெறுப்புடன் காப்பியை ஆற்றிக் கணவனுக்குக் கொடுத்தாள்.

கிழவர் ஆச்சர்யத்துடன், "ஆ! இந்தப் பெண்ணுக்கு வலக்கையில் ஆறு விரல்கள் இருக்கின்றனவே. அதிர்ஷ்டக்காரி" என்றார். வண்டி புறப்பட்டுவிட்டது.

"தம்பீ! நீங்கள் சென்னையில் எங்கு வாசம் புரிகின்றீர்கள்?"

"தியாகராயர் நகர்—உஸ்மான் ரோட்டில் 37ம் நெம்பர் வீட்டில் இருக்கின்றோம்" என்றாள் ஜெயசேனா. அவள் குரல் தேன்போல இனித்தது.

கிழவர் தன் நாட்குறிப்பை எடுத்து ஒரு முறை பார்த்துவிட்டு மீளவும் சட்டைப்பையில் வைத்துக் கொண்டார். அவருடைய முகத்தில் ஒரு விதமான மகிழ்ச்சி ததும்பியது.

திண்டுக்கல் வந்தவுடன் அவர் அவர்களைப் பார்த்து சிரித்த முகத்துடன், "நான் எழும்பூர் சேர்ந்தவுடன் உங்களைச் சந்திப்பேன். நீங்கள் சிறிது ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டு, தான் முன் ஏறிவந்த முதல் வகுப்புக்குப் போய்விட்டார்.

கிழவருடைய செய்கையில் வெறுப்புக் கொண்ட அந்த இருவரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் சிரித்துக் கொண்டார்கள்.

ஜெயசேனா, திருநீறு இட்டுக் கொண்டு மாலையில் தான் வழக்கமாகப் பாராயணம் புரியும் சண்முக கவசத்தைப் பயபக்தியுடன் பாராயணம் புரிந்தாள்.

"ஜெயா! நீயும் முருகன்மீது அளவற்ற அன்பு பூண்டிருக்கின்றாய். நானும் கந்தனே கலியுகத்தில் கண்கொண்ட தெய்வம் என்று நம்பியுளேன். ஒரு பெரியவருடைய உபதேசப்படி வேலை வைத்து வழிபடத் தொடங்கினேன். வேலைப் பூசிக்கத் தொடங்கியவுடனே வேலை போய்விட்டது. ஆனால் முருகனை முழுமனதுடன் நம்பியிருக்கின்றேன். வேலையில்லாமல் எத்தனை நாளைக்குத்தான் இருப்பது. இப்போது நான் ஒன்றுக்கும் உதவாக்கரையாக மாமனார் வீட்டிலேயே தங்கவேண்டிய விதியேற்பட்டு விட்டது. எனக்கும் வெட்கமாக இருக்கின்றது. நான் போகாத தொழிற்சாலைகள் இல்லை. எங்கு போனாலும் வேலை கிடைக்கவில்லை. வேலைக்கு அலைந்த உஷ்ணம் 15 நாள் குற்றால ஸ்னானத்தில் தணிந்தது" என்று கூறி கைத்துண்டினால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

ஜெயசேனா, "நீங்கள் கவலைப்படாதீர்கள். முருகன் கருணாநிதி தயாசாகரம். பக்த பரிபாலன். அந்த ஆறு தலையானை இடையறாது வழிபட்டு வந்தால் நமக்கு ஆறுதலை கிடைக்கும். எம்பெருமான்

எந்த சமயத்தில் எந்த வகையில் அருள் புரிவான் என்று நம்மால் கண்டுபிடிக்க முடியாது. உலகத்திலே எப்போதும் பகலே யிருக்கின்றதா? தினம் பவுர்ணமி யுளதா? இரவும் பகலும், அமாவாசையும் பௌர்ணமியும் மாறி மாறித்தான் வருகின்றன. இன்ப துன்பங்கள் மாறி மாறி வரும். கந்தவேள் கருணை புரிவான். நீங்கள் கண் கலங்க வேண்டாம்'' என்றாள்.

''ஜெயா! உனக்கிருக்கின்ற திடசிந்தை எனக்கில்லை. நீ சிறந்த மேதை...ம்...உன் பேச்சு அமுதம்போல் இனிக்கின்றது. ஆமாம் ஜெயா! அந்தக் கிழவன் உன்னை திருதிரு என்று விழித்துப் பார்த்தானே. உனக்கு ஆத்திரம் உண்டாகவில்லையா?'' என்றான் சிவசங்கரன்.

ஜெயசேனா. ''என் அன்புக் கருவூலமே! முதலில் ஆத்திரம் வந்தது. பிறகு என்னமோ அந்தக் கிழவன்மீது ஒரு பாசம் தோன்றியது. அநுதாபமும் உண்டாகியது. அதை மறந்து விடுங்கள்'' என்றாள்.

பல பல என்று பொழுது விடிந்தது. வண்டி செங்கல்பட்டுக்கு வந்து நின்றது. I. R. R. சப்ளையருடன் அக்கிழவர் மீளவும் இவர்கள் பெட்டியில் வந்து ஏறினார். இரு தட்டில் பலகாரம் காப்பி இவைகள் வைக்கப்பட்டன.

பெரியவர், ''தம்பீ! தங்கட்குத் தாய் தந்தையர்கள் இருக்கின்றார்களா?'' என்று வினவினார். சிவசங்கரத்துக்கு 'இந்தக் கிழவன் நம்மை லேசில் விடமாட்டான் போல் இருக்கின்றதே' என்று கருதினான்.

''என் பெற்றோர்கள் இளமையிலேயே காலமாகி விட்டார்கள். இப்போது எனக்கு தாய் தந்தை குருதெய்வம் எல்லாம் முருகன் தான்'' என்றான்.

''தம்பீ! கடவுளை நம்பினோர் கைவிடப்படார். உனக்கு ஒரு குறையும் வராது. முருகன் தெய்வசிகாமணி. அடியவர் குறை தீர்க்கும் அருட் பெருங்கடல். உனக்கு முருகன் கருணை புரிவான். இவர் பேர் யாது?''

''ஜெயசேனா.''

''ஓ! ஜெயசேனா, ஜெயசேனா. நல்ல அற்புதமான பேர்'' என்று கூறிய கிழவர் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் சொரிந்தது. இதைப் பார்த்தவுடன் ஜெயசேனாவுக்கும் சிவசங்கரனுக்கும் கிழவர் மீதிருந்த வெறுப்பு சிறிது குறைந்தது. கிழவர் தன் சட்டைப்பையிலிருந்த பட்டுத்துண்டால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டார். பேச முடியாமல் திணறினார், அவருக்கு நா குழறியது. குரல் தழு

தழுத்தது. தாம்பரம் வந்தவுடன் சோடா வாங்கிக் குடித்து அவர் தன்னை ஒருவாறு தேற்றிக் கொண்டார்.

எழும்பூரில் வண்டி நின்றது. சிவசங்கரமும் ஜெயசேனுவும் தங்கள் மூட்டை முடிச்சுக்களுடன் இறங்கினர்கள். பெரியவர் "தம்பீ! சிறிது நில்லுங்கள். நான் கார் பிடித்து வருகின்றேன். நாம் மூவரும் ஒரே காரில் போகலாம்" என்றார். சிவசங்கரனுக்கு திகைப்பு ஒரு புறம். எரிச்சல் மறுபுறம். பெரியவர் அங்கு நின்ற ஒரு பெரிய வாடகை காரை அழைத்தார். தன் சாமான்களை டிக்கியில் ஏற்றச் செய்தார். அத்தம்பதிகளைப் பின் சீட்டில் ஏறச் செய்து, தான் முன் சீட்டில் ஏறிக் கொண்டார்.

"டிரைவர்! மாம்பலம் உஸ்மான் ரோட்டுக்கு வண்டியை விடு" என்றார். அவர் குரலில் அதிகாரத் தொனி இருந்தது. இருப்பிடம் போனவுடன் சாமான்களுடன் மூவரும் இறங்கினர்கள். ஜெயசேனு வின் தாயாரும் தகப்பனரும் எதிர்கொண்டு அழைத்தார்கள்.

தாய், "அம்மா! ஜெயா! பெரியவர் யார்?" என்று கேட்டாள். "ரெயிலில் சந்தித்தோம். அவரே நம்ம வீட்டுக்கு வந்துள்ளார்" என்றாள் ஜெயசேனு. பெரியவர் ஜெயசேனுவின் தந்தையாருடைய உதவியால் நீராடி அநுஷ்டானம் செய்து பசியாறினர்.

சிவசங்கரன் ஜெயசேனுவைப் பார்த்துத் தனிமையில், "ஜெயா! கிழவன் நம்ம கூடவே அட்டை மாதிரி ஒட்டிக் கொண்டு வந்துவிட்டானே? ஆனால் ஆளைப் பார்த்தால் பெருந்தகுதி உள்ளவர்போல் தோன்றுகின்றதே. ஒன்றுமே புரியவில்லை. ஆனால் உன்மீது வைத்த கண்ணை கிழவன் வாங்கினனில்லை. அதுதான் எனக்குப் பெரிய எரிச்சல். கிழவனைக் கிளப்புவதற்கு என்ன வழி?" என்று கேட்டான்.

ஜெயசேனு, "ஒன்றும் அவசரப்படாதீர்கள். கிழவர் பெரிய மனிதர். சிறிது பொறுங்கள். ஏதோ முருகன் கருணை செய்வார்" என்றாள்.

சிறிது நேரம் பொறுத்துப் பெரியவர் வெளியே போனர். பழக் கூடைகள், காலிப்ளவர், முட்டைக்கோசு, பச்சைப்பட்டாணி, தக்காளி, பீட்ரூட், டபுள்பீன்சு, ஆபிள், ஆரஞ்சு கூடைகளுடன் ஒரு டாக்ஸியில் வந்தார். கூடம் நிறைய அந்தக் கூடைகளை இறக்கினர்.

"அம்மா! ஜெயம்! இவற்றை எடுத்து உள்ளே வை" என்றார் பெரியவர். அவர் அழைத்த அழைப்பில் பாசமும் நேசமும் இழை யோடின. சிவசங்கரத்துக்கு இருந்த சந்தேகம் தணிந்தது.

மாலை கிழவர் சிவசங்கரத்தையும் ஜெயசேனுவையும் அழைத்துக் கொண்டு சாந்தி தியேட்டருக்குப் படக்காட்சிக்குச் சென்று மேல் வகுப்பு டிக்கெட்டு வாங்கிக் கொண்டு படம் பார்த்தார்.

மறுநாள் காலை ஜெயசேனுவின் தாயாரை அழைத்துப் பெரியவர் "அம்மா! முருகன் சாட்சியாகச் சொல்லு. ஜெயா நீ வயிற்றில் சுமந்து பெற்ற பெண்ணா?" என்று கேட்டார். அப்போது நாற்காலிகளில் அமர்ந்திருந்த ஜெயாவின் தந்தையாரும் சிவசங்கரமும் அதிர்ச்சியுற்றார்கள்.

ஜெயாவின் தாய், "பெரியவரே! 16 ஆண்டுகட்கு முன் ஒருவன் மூன்று வயதையுடைய இவளை எங்களிடம் கொடுத்துவிட்டு ஐந்து ரூபாய் பெற்றுக்கொண்டு போனான். குழந்தையில்லாத எங்களுக்கு முருகன் தந்த வரப்பிரசாதம் இவள். இவளை நாங்கள் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்தோம். P. U. C. வரை படிக்க வைத்தோம். கல்லூரியிலேயே இவரை இவள் காதலித்தாள். மகளின் விருப்பப்படி இவருக்குத் திருமணம் செய்து கொடுத்தோம். இவர் சிறந்த சீலமும் கோலமும் உடையவர். முருகனை உபாசிக்கின்றவர்" என்றாள்.

இதைக் கேட்ட பெரியவர் விம்மி விம்மி அழத் தொடங்கினார். "என் கண்ணே! ஜெயா! அம்மா! என் செல்வமே!" என்று ஜெயசேனுவைக் கட்டிக்கொண்டு கோ என்று வாய்விட்டு அழுதார். இந்தக் காட்சியைக் கண்ட சிவசங்கரத்தின் கண் குளமாக மாறியது.

"அப்பா சிவசங்கரம்! நான் மதுரை. ஒரு பெரிய தொழிலதிபன். என்னிடம் பலர் வேலை செய்கின்றார்கள். இவளைப் பெற்றவுடன் இவள் தாய் கண்களை மூடிவிட்டாள். தாயில்லாத இவளைச் செல்வமாக வளர்த்தேன். நகைக்கு ஆசைப்பட்ட என் சமையல்காரன் இவளை எனக்குத் தெரியாமல் இங்கு கொணர்ந்து நகைகளைக் கழற்றிக் கொண்டு விற்றுவிட்டான். அன்று முதல் நேற்றுவரை என் வாழ்வு இருண்டுவிட்டது. நான் குற்றாலம் போயிருந்தேன். அந்த சமையல்காரன் நோய்வாய்ப்பட்டு இறக்குந் தருவாயில் இவளைப் பற்றிச் சொல்லி விலாசத்தையுந் தந்தான். நான் என் செல்வப் புதல்வியைக் காண வண்டியில் ஏறினேன். விருதுநகரில் இவளைப் பார்த்தவுடன் இவள்மீது ஆழங்காண முடியாத அன்பு ஏற்பட்டது. ஆனால் புரியவில்லை. இதோ இவள் குழந்தையாக இருந்தபோது எடுத்த போட்டோ" என்று எடுத்துக் காட்டினார். அதைப் பார்த்து அனைவரும் திகைத்தார்கள். மகிழ்ச்சியுற்றார்கள்.

சிவசங்கரம் மாமனாராகிய பெரியவர் திருவடியில் வீழ்ந்து அழுதான். ஜெயசேனு பிதாவைக் கட்டிக்கொண்டு அழுதாள். துன்பமும் இன்பமும் பெருக்கெடுத்து ஓடின.

பெரியவர், மறுநாள் ஜெயசேனுவையும் மருமகன் சிவசங்கரத்தையும், ஜெயாவை வளர்த்த தாய் தந்தையரையும் அழைத்துக் கொண்டு மதுரை சேர்ந்தார்.

மதுரை சொக்கிகுளத்தில் உள்ள கடல்போல பரந்த பங்களாவைச் சேர்ந்தார்கள்.

ஜெயசேனு தன் கணவனுடன் தந்தையாருடைய செல்வச் செழிப்பில் சிறந்து வாழ்ந்தாள்.

# மகாபாரதம்

---

## சாந்தி பருவம்

### மோக்ஷ தருமம்

(90 - ஆம் பக்கத் தொடர்ச்சி)

யுதிஷ்டிரர் "பிதாமகரே! எனக்குத் தங்கள் வாக்கு அமுதம் போல் இனிக்கின்றது. யோகத்தைப் பற்றியும் யோகிகளைப் பற்றியும் கூறவேண்டும்" என்று கேட்டார்.

பீஷ்மர் "தருமநந்தனு! யோகநெறி கடினமானது. குறைந்த யோக பலமுள்ளவன், மீன் வலையில் நசிப்பதுபோல் குன்றிவிடுவான். சிறந்த யோக சக்தியுடையவன், வலிமையுள்ள மீன் வலையை யறுத்து வெளிப்படுவது போல் மாயையை உதறித் தள்ளிவிட்டு பிரம்மத்தை யடைகின்றான். உத்தமமான யோகி அநேகம் ஆயிரம் ஆயிரம் சரீரங்களை எடுத்துக் கொள்ளுவான். ஒன்று உலக போகங்களை நுகரும்; மற்றொன்று உக்கிரமான தவஞ் செய்யும். யோகியின் சிறப்பு அளவிட முடியாதது. வில்லாளி குறியில் கவனம் வைத்து லட்சியத்தை யடிப்பதுபோல் யோகி பிரமத்தில் லட்சியம் வைத்து பிரமத்தை அடைகின்றான். யோகிக்கு இயமனும் சூரிய சந்திரரும் அஞ்சியடங்குவார்கள்.

யோக வலிமையில்லாதவனை சிறிய நெருப்பைக் கட்டைகள் அவிப்பதுபோல் உலக விவகாரங்கள் அடக்கிவிடுகின்றன. பெரிய நெருப்பு கொழுந்துவிட்டு காட்டையையுங் கட்டைகளையும் எரிப்பது போல் யோக வலிமை மிகுந்த யோகி மாயா பாசங்களை எரித்துவிடுகின்றான். யானை வெள்ளத்தைத் தடுப்பதுபோல், தன்பால் வரும் வினைகளை யோகி தடுத்துவிடுகின்றான்.

யோகி பிண்ணுக்கு முதலிய உணவுகளைத் தள்ளி யவமாவை மட்டும் உண்டு, கற்பகாலம் வாழ்வான். முக்குணங்களையும் மூவாசைகளையும் விட்டு முக்காலங்களையும் உணர்ந்து மும்மூர்த்திகளையும் கண்டு பிரம்மத்தை யடைகின்றான்" என்றார்.

தருமர் "ஞானநிதியே! சாங்கியத்தின் பெருமையை எனக்குச் சொல்லும்" என்று கேட்டார்.

பீஷ்மர், "அரசனே? சாங்கிய தருமம் மிகச் சிறந்தது. அதனைக் கபிலர் முதலிய முனிபுங்கவர்களே யறிவார்கள். சாங்கிய தருமத்தில் எல்லா சாத்திரங்களும் அடங்கியிருக்கின்றன. சாங்கிய தருமத்தைக் கபில முனிவர் பிரகாசப்படுத்தினார். அதனால் அதனைக் கபில மதம் என்றுங் கூறுவர். உண்மையான சாங்கிய தருமத்தை யுணர்ந்தவர்

கள் பரமபதத்தைப் பெறுகின்ருர்கள். சாங்கிய ஞானத்துக்கு நிகரான ஞானம் இல்லை'' என்ருர்.

## க்ஷராக்ஷர இலக்கணம் வசிட்டர் ஜனகருக்கு உபதேசித்தது

தருமர், ''தவநிதியே! ஜீவன் அடைந்த பின் திரும்புவதில்லாத அக்ஷரம் என்று சொல்லப்படுவது எது? திரும்புகின்ற க்ஷரம் என்று சொல்லப்படுவது எது? அக்ஷரம் க்ஷரம் என்ற இவைகளின் பேதத்தை அறிய விரும்புகின்றேன். தாங்கள் வேதத்தின் கரையைக் கண்டவர்; ஞானநிதியாக விளங்குகின்றீர். உம்முடைய நாட்களில் இன்னும் சிலவே யிருக்கின்றன. சூரிய பகவான் உத்தர திசைக்குத் திரும்பியவுடன் நீர் மேலான கதியை அடையப் போகின்றீர். நீர் மறைந்த பின் இவற்றை நாங்கள் யாரிடம் கேட்டு அறிய முடியும்? ஆதலால் எமக்குத் தாங்கள் அமுதம் போன்ற பகுதியைக் கூறும்'' என்று கேட்டார். பீஷ்மர் கூறுகின்ருர்.

''உத்தமமானவனே! ஜனகராஜன் வசிட்ட முனிவரை வணங்கி க்ஷராக்ஷரங்களைப்பற்றிக் கேட்டான். வசிஷ்டர் ''ஜனகனே! உனக்கு க்ஷரத்தையும் அக்ஷரத்தையும் கூறுவேன் கேள். தேவ வருடங்கள் பன்னீராயிரங் கொண்டது ஒரு சதுர்யுகம். இது கற்பம் எனப்படும். ஆயிரங்கற்பங்கள் கொண்டது பிரமதேவனுடைய பகல். சம்புவானவர் பிரமாவை யுண்டாக்கினுர். இரண்யகர்ப்பரான இவர் எல்லா உலகங்களையும் படைத்தார். உடம்புடன் கூடிய ஆன்மா க்ஷரம் என்று சொல்லப்படும். இந்த ஆன்மா இருபத்துநான்கு தத்துவங்களுடன் கூடி வாழ்கின்றது. திருமால் இருபத்தைந்தாவது தத்துவமாக விளங்குகின்ருர்.

ஆத்மா புரம் என்ற சரீரத்தில் வசிப்பதனுல் புருஷன் என்று பேர் பெற்றது. ஆன்மா பாவ புண்ணியங்களைச் செய்து பல கோடிக் கணக்கான பிறப்புகளை அடைகின்றது. எந்த ஆன்மா குணங்களைப் பற்றுவதில்லையோ அது பிறப்பற்ற அக்ஷரத்தை யடைகின்றது. ஜனகனே! இந்த அரிய தத்துவத்தை உத்தமனுக்கு மட்டுமே உபதேசிக்க வேண்டும். நற்குணமில்லாதவனுக்கு உபதேசிக்கக் கூடாது. நீ க்ஷரத்தை விடுத்து அக்ஷரத்தையடுத்து பிறவாத பெற்றியைப் பெறுவாய்'' என்று கூறினுர்.

யாஜ்ஞவல்கியர் ஒரு சமயம் ஜனகருக்கு உலக உற்பத்தியையும், யோகம் சாங்கியம் என்பவைகளைப் பற்றியும், உலகம் ஒடுங்கும் முறைகளையுங் கூறினுர். முன் பார்த்த அருந்ததி நட்சத்திரமும், துருவ நட்சத்திரமும் தோன்ருதிருக்குமாயின் ஒராண்டில் மரணம் உண்டாகும். சூரிய சந்திரர்களைத் துவாரம் உடையவையாகப் பார்க்கின்றவர்கள் ஏழு ராத்திரியில் மரணமடைவார்கள். காது மூக்குகள் வளைதலும்

முருகா

# தொல்காப்பியமும் சைவசித்தாந்தமும்

இராவ் சாகேப். கு. கோதண்டபாணி பிள்ளை
A. செம்மங்குடி P. O. திருச்சேறை வழி (கும்பகோணம்)

தொல்காப்பியத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்கள் பல விரவியுள்ளன வென்பர் ஆராய்ச்சியாளர். தொல்காப்பியம் தரும் எழுத்துக்களின் பெயர்களே மெய்ப்பொருளியல் பொதிந்த பெயர்களாக அமைந்துள்ளன. உயிர், மெய் என்ற எழுத்தின் பெயரும் வினை என்ற சொல்லின் பெயரும் மெய்ப்பொருளியல் (தத்துவப்) பெயர்கள் ஆவன. ஆன்மா என்ற வடமொழிப் பெயரும், உயிரென்ற தமிழ்ப் பெயரும் ஒரே பொருளைக் குறிப்பன. உலகத்து உயிர்கள் போன்று உயிரெழுத்துக்கள் எழுத்துலகில் இயங்குவதனுல் அவை உயிரெனப் பெயர் பெற்றன. மெய்யென்பது உடல் எனப் பொருள்படும். உடலை மெய்யென்றது மங்கல வழக்கன்று. இறைவ—உயிர்—உலகு (மலம்) என்ற முப்பொருளுண்மையை வற்புறுத்துவது சைவசித்தாந்தம். ஆதலின் உலகின் மலக்கூறுகிய உடலை மெய்யென்றே கருதுவது சைவசித்தாந்தம்.

உடல் காரியமாய்த் தோன்றி, இருந்து ஒடுங்கினும் அஃது அழிவதன்று, ஒடுங்கி மலத்துளதாம். அழிவென்பதெல்லாம் மாற்றம்

---

பற்களிலும் கண்களிலும் பசையற்றுப் போதலும், அறிவழிதலும் சூடு தணிதலும் உடனே உண்டாகும் மரணக் குறிகளாம். இடக்கண் காரணமில்லாமல் கண்ணீர் விடுகின்றதும், தலையிலிருந்து புகை கிளம்புகின்றதும் உடனே யுண்டாகும் மரணத்துக்கு அடையாளங்களாகும்,' என்று கூறினர்.

தருமர் "பிதாமகரே! மரணத்தைப் போக்க வழியுண்டா? கர்மத்தினுல் அத்யயனத்தினுல் ரசாயனங்களை உண்பதனுல் மரணபயம் தவிருமா?" என்று கேட்டார்.

பீஷ்மர், "இதுபற்றி ஒரு சமயம் ஜனகர் பஞ்சசிகர் என்ற மாமுனிவரைப் பார்த்துக் கேட்டார். பஞ்சசிகர் "ஜனக மன்னனே! எந்த வழியாலும் மூப்பு மரணத்தைத் தடுக்க முடியாது. சென்ற நாட்கள் திரும்பி வருவதில்லை. காலவெள்ளம் எல்லாவற்றையும் இழுத்துச் செல்லுகின்றது. ஆதலால் அறிஞன் மரணம் வருவதற்கு முன் இறைவனுடைய சரணத்தை அடைய வேண்டும்" என்று கூறினர்.

(தொடரும்)

இல்லாமல் போவதன்று. உடலிறக்கக் காணினும் அவ்விறப்பென்பது அதன் மாற்றத்தின் அறிகுறியென்பர்.

வினை என்றது ஒரு பொருளின் தொழிலை அல்லது செயலை உணர்த்துவது. ஆன்மா, அல்லது உயிர் செயற்படுவதை, மெய்ப் பொருளியலார் வினை என்ற அழைப்பர். வினை என்பது வடமொழியில் கர்மா என்று பெயர் பெறும்.

"மெய்யின் வழியது உயிர்தோன்று நிலையே"

(தொல். நூன்மரபு-18)

என்று கூறுகின்றது தொல்காப்பியம்.

மெய்யின் வழியாக உயிர் தோன்றுகிறது. உயிரும் மெய்யும் சேர்ந்து உயிர்மெய், உயிர்பெற்ற மெய்யாகின்றது. அவ்வாறே உலகத்துயிர்களும் உடல் வழியே தோன்றுகின்றன. உடல், உயிர் பெற்ற உடலாகின்றது. செயலற்ற மெய்யெழுத்துக்கள், உயிர் சேர்ந்தாலன்றி இயங்குவதில்லை; உயிரின்றி அவற்றை ஒலித்தல் இயலாது; உயிர் சேர்ந்தபிறகே அவற்றின் வாழ்வு தொடங்குகின்றது. அதேபோல ஆன்மா அல்லது உயிர் தோன்றுவதற்கும் ஒரு பற்றுக்கோடு வேண்டும். அப் பற்றுக்கோடு உடலாக அமைகின்றது. இவ்வுயிர் மெய்யெழுத்தின் கூட்டங்கள் சொற்களாக, சொற்றொடர்களாக, மொழி உலகமாக அமைகின்றன. அதேபோல ஆன்மாவோடு சேர்ந்த உடல் ஒன்று பலவாகி இவ்வுலகமாகக் காட்சியளிக்கின்றது.

இவ்வாறு மெய்யோடுயிர் சேரினும் உயிரினுடைய தன்மை மாறுவதில்லை என்று கூறுகின்றது தொல்காப்பியத்தின் மற்றொரு நூற்பா.

"மெய்யோ டியையினும் உயிரியல் திரியா"

(தொல்—நூன்மரபு. 10)

உயிரெழுத்து மெய்யெழுத்தோடு சேருகின்ற பொழுது அவ்வுயிரெழுத்தின் தன்மை மாறுவதில்லை அதேபோல உடலோடான்மா சேரினும், அவ்வான்மாவின் தன்மை மாறுவதில்லை. ஆன்மாவும் உடலும் வெவ்வேறு தன்மையுடையன. ஆனால் அவை ஒன்று சேர்கின்றபோது ஆக்கமும் பெருக்கமும் உண்டாகின்றன. ஆக்கமும் பெருக்கமும் நேரினும் ஆன்ம இயல்பு மாறுவதில்லை.

"மெய்யி னியக்கம் அகரமொடு சிவணும்"

(தொல்—மொழிமரபு. 13)

என்றும் கூறுகின்றது மற்றொரு நூற்பா. இங்குத் தொல்காப்பியர் குறிப்பிடுதலை ஆழ்ந்து கருதுதல் வேண்டும். 'மெய்யினியக்க முயிரொடு சிவணும்'என்று தொல்காப்பியர் கூறினரிலர். ஏனைய உயிர்

களினின்றும் அகரம் இங்குப் பிரிக்கப்பட்டுள்ளது. அது ஒரு தனித் தன்மையைப் பெற்றுள்ளது, என இந்நூற்பா காட்டுகின்றது. அகர மும் இங்கு உயிர்க்குயிராக அமைகின்றது. அவ்வாறமைவதோடு மட்டுமின்றி மெய்யெழுத்துக்களுக்கும் அதுவே உயிராக அமை கின்றது.

அகரவொலி மற்ற எல்லா உயிர் ஒலிகளுக்கும் மெய்யொலிகளுக் கும் உயிராக இருப்பதுபோல இறைவன் எல்லா உயிர்களுக்கும் ஏனை உடல் பெற்ற எல்லா உயிர்களுக்கும் (ஆன்மாக்களுக்கு) உயிராகக் கலந்திருக்கின்ருன். அகரம் மற்ற எழுத்துக்களோடு கலந்திருப்பினும் அஃது அதன் தன்மையில் மற்ற எழுத்துக்களிலிருந்தும் வேறுபட்டது. அதுபோல இறைவனும், உயிர்களோடு கலந்திருப்பினும் உயிர்களின் வேருனவர். உயிரெழுத்துக்களும், மெய்யெழுத்துக்களும் தொழிற் படும்போது அகரம் உடனிருந்து அவற்ருேடு தொழிற்படுகின்றது. அதேபோல இறைவன் ஏனைய உயிர்களோடும், உலகப் பொருள் களினும் வேருயினும், அவை தொழிற்படும்போது அவ்வவற்றின் உடனுய் அமைகின்ருர். இம்மொழியியற் கருத்துக்கள் சித்தாந்தக் கருத்துக்களுக்கு ஒப்புமை உடையனவாதலைக் காணலாம். இறைவன், ஆன்மாக்கள் உலகப் பொருள்கள் ஆகியவற்றினின்றும் பொருட்டன் மையால் வேருய், கலப்பினுலொன்ருய், தொழிற்படுங்கால் உடனு மாய் இருப்பனென்று சித்தாந்த சாத்திரம் கூறுகின்றது. அகரத்தி னியல்பும் அவ்வாறே ஏனைய உயிரெழுத்துக்கள் மெய்யெழுத்துக்களி னின்றும் பொருட்டன்மையால் வேருய், கலப்பினுலொன்ருய், தொழிற்படுங்கால் உடனுமாயிருத்தலைக் காண்க.

வினை என்பது தொழில், ஆன்மா தொழிற்படுவதற்கு இஃது ஒப்பாகும். தமிழெழுத்துக்களின் அகரத்தின் இயல்பைக் கொண்டு கடவுள் உண்மையை முற்றும் நிறுவ முதன் முதல் முற்பட்டவர் திரு வள்ளுவர். இக்கருத்தின் விரிவைத் திருக்குறள் உரையாசிரியர்கள் உரையிலும், முதற்குறளுவமை என்ற நூலிலுங் காணலாம். மெய் கண்ட தேவரும் இவ்வகரத்தின் இயல்பைக் கொண்டு கடவுளுண் மையை நிறுவுகின்ருர்.

அவர் கூறுவதைக் காண்க:

"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீபாசத் தோடுளேகாண்—ஒன்றின்ருல்
அக்கரங்கள் இன்ரும அகரவுயிர் இன்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு"*

---

*இருக்கு என்பது தமிழ் மந்திரம் என்ற பொருளில் திருக்குறளைக் குறிக்கும்.

அகர உயிரில்லையாயின் எழுத்துக்களினியக்கம் இல்லை. அதுபோல கடவுளில்லையாயின் எப்பொருளின் இயக்கமும் இல்லை; அகரமும் மற்ற எழுத்துக்களும் வெவ்வேருக உளவாயினும் அகரவொலியை யின்றி அவ்வெழுத்துக்கள் தனித்து ஒலிப்பதில்லை. அவ்வண்ணமே இறைவனும் உயிரும் வெவ்வேருயினும் அவ்விறைவனையின்றி அவ்வுயி ரியங்குவதில்லை.

"மெய்யி னியக்க மகரமொடு சிவணும்"

(தொல்—எழுத்து 46)

நச்சினர்க்கினியர் எழுதிய உரையையுங் காண்க. மெய்யெழுத் துக்களேயன்றி, அகரம் ஒழிந்த ஏனைய உயிரெழுத்துக்களும் அங்காற் தியலும் அகரவொலியின்றி இயங்கா. இதன் விரிவை முதற் குறள் உவமை என்ற நூலிற் காண்க.

அருணந்தி சிவாச்சாரியாரும் அக்கரங்கள் தோறும் சென்றிடும் அகரம்போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே என இக்கருத்தையே கையாள்வதைக் காண்க. மனவாசகம் கடந்தார், அவருடைய உண்மை விளக்கம் என்ற நூலில் அகர உவமையையும், இக்கருத்தை யும் ஆளுவதைக் காணலாம் :

"அக்கரங்கட் கெல்லாம் அகரவுயிர் நின்ருற்போல்
மிக்க உயிர்க்குயிராய் மேவினேம்—எக்கண்ணும்
நில்லா இடத்துயிர்க்கு நில்லா அறிவென்று
நல்லா கமம்ஓதும் நாடு." (உண்மை விளக்கம்—20)

உமாபதி சிவாச்சாரியாரும் அவருடைய 'திருவருட் பயன்' என்ற நூலில்,

" அகர உயிர்போல் அறிவாகி எங்கும்"

என்ருர்.

மேலே கண்டவாறு சந்தான குரவர் மட்டுமன்றிச் சமய குரவர் களும் அகரவெழுத்தின் மெய்ப்பொருளியல்பைப் பயன்படுத்தியுள்ள தைக் காணலாம்.

'அகர முதலானை அணி ஆப்பனூ ரானை'

(சம்பந்தர். ஆர்ப்ப—5)

'ஆனத்து முன் எழுத்தாய் நின்ருன்போலும்'

(அப்பர். ஆரூர்—7)

'அகரம் முதலின் எழுத்தாகி நின்ருய்'

(சுந்தரர். அரத்—7)

சிவஞான போதத்தின் முதற் நூற்பாவே ஆண்பால்—பெண்பால் (உயர்திணை) அஃறிணை எனும் பாகுபாட்டைத் தழுவி அவன், அவள் அதுவெனத் தொடங்குகின்றது. (தொடரும்)

## எமது வெளியீடுகள்

1. திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் — ரூ. 6-00
2. கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) — அச்சில்
3. திருப்புகழ்த் திரட்டு — ரூ. 1-00
4. திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற் படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) — ரூ. 2-50
5. திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர் — அச்சில்
6. திருப்புகழ் விரிவுரை—மூன்ருவது தொகுதி (மூன்ருவது படைவீடு—பழநி) — ரூ. 5-00
7. திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலே) — ரூ. 2-50
8. திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோருடல் முதற்பாகம் — ரூ. 5-00
9. திருப்புகழ் விரிவுரை—ஆரும் தொகுதி (குன்றுதோருடல் இரண்டாவது பகுதியும், பழமுதிர் சோலேயும்) — ரூ. 5-00
10. மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது — ரூ. 5-00
11. கந்தரநுபூதி (உரையுடன்) — ரூ. 2-00
12. அறிவுரையமுது (கட்டுரைகள்) — ரூ. 0-50
13. திருவாசகத்தேன் ( ,, ) — ரூ. 0-50
14. செந்தமிழ் இன்பம் ( ,, ) — ரூ. 0-50
15. சிந்தனேத்தேன் ( ,, ) — ரூ. 0-50
16. மணிமொழிகள் — ரூ. 0-50
17. அநசூயை (வரலாறுகள்) — ரூ. 1-00

---